[29th August 1961

*Groundnut Crops (Pest attack)*

* 1473 *Q.*—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI T. T. DANIEL) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) how many acres of groundnut crops were affected by caterpillar pest in the Madurai district;

(*b*) the steps taken to prevent this; and

(*c*) the nature of relief given to the agriculturists whose crops were thus destroyed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A paper [a] is placed on the table of the House.

SRIMATHI A. S. PONNAMMAL : தலைவர் அவர்களே, இம்மாதிரி கம்பளிப் பூச்சி அடிக்கடி, அதாவது ஒவ்வொரு ஆண்டும் மதுரை ஜில்லா, இன்னும் இதர ஜில்லாக்களிலும் ஏற்பட்டு பெருத்த நஷ்டமேற்படுகிறது. ஆகவே இதைப் பரிசீலனை செய்து, கிராப் இன்சூரன்ஸ் திட்டத்தை அமுல் நடத்துவதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த கிராப் இன்சூரன்ஸ் திட்டத்தை அமுல் நடத்துவதுபற்றி முன்னாலேயே நான் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறேன். ஆனால் இதிலே அந்தக் குறிப்பிட்ட காலத்தில் விவசாயிகள் எல்லோரும் ஒத்துழைத்தால், இந்தக் கஷ்டம் வராமல் தவிர்க்கலாம். ஆனால் மதுரை ஜில்லாவிலே இந்தப் பூச்சித் தொல்லை அதிக கஷ்டத்தை விளைவித்திருக்கிறது. அதை ஒழிப்பதற்காக விவசாய இலாகாவினர் விவசாயிகளிடையே இப்போது தீவிர பிரசாரம் செய்து வருகிறார்கள்.

*Private Electrical Undertakings.*

* 1474 *Q.*—SRI A. R. MARIMUTHU : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தற்சமயம் மின்சார விநியோகம் செய்யும் தனிப்பட்ட கம்பெனிகளை சர்க்காரே எடுத்து நடத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI V. RAMAIAH : Of the 21 private company electrical undertakings, the Government have already acquired 13 and the question of acquiring 8 electrical undertakings in the State is under the consideration of the Government.

SRI R. SRINIVASA IYER : இந்தத் தனியார் துறை மின்சார விஸ்தரிப்புக் கம்பெனிகளை எவ்வெப்போது அக்வயர் செய்ய திட்டமிடப்பட்டு இருக்கிறது. அவைகளை அக்வயர் செய்யாமல்

---

a Printed as Appendix I on page 319 infra.

29th August 1961]

இருப்பதால், அவர்களும் மின்சாரத்தை விஸ்தரிக்க முடியாத நிலைமை ஏற்பட்டிருப்பதால், உடனடியாக அவைகளை அக்வயர் செய்வதற்கு ஏதாவது சர்க்கார் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI V. RAMAIAH : எப்போது அக்வயர் செய்யலாம், எந்த முறையில் அக்வயர் செய்யலாம் என்பதையெல்லாம் இப்போது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

DEPUTY SPEAKER : The mike in the front bench is not working. I would request the hon. Member to speak aloud.

SRI V. K. KRISHNAMURTHY : வட்டார வளர்ச்சித் திட்டங்கள் செயல்பட்டுக்கொண்டு வரும் சில இடங்களிலேகூட இந்தத் தனியார் துறையினரின் ஆதிக்கம் இருக்கின்ற காரணத்தி னாலே, விவசாய வேலைகளுக்குகூட அவ்வப்போது மின்சாரம் விஸ்தரிக்க முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே உடனடியாக அதற்கு மட்டுமாவது ஒரு தனிச் சட்டத்தைக் கொண்டுவர இந்த அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI V. RAMAIAH : இப்போது அரசாங்கத்தின் முன் இருக்கக்கூடிய பிரச்னையெல்லாம் எப்படித் தனியார் துறையினரிடமிருந்து அப்படிப்பட்ட பகுதிகளிலுள்ள விவசாயி களுக்கு துரிதமாக மின்சாரம் கொடுப்பது என்பதுதான். அதற்கு என்னென்ன முயற்சிகள் எடுக்க வேண்டுமென்பது இப்போது பரிசீலனையில் இருந்து வருகிறது.

SRI M. KALYANASUNDARAM : ஸார், இந்த தனியார் துறையினரிடமிருந்து எடுத்துக்கொள்ளும் விஷயமானது சுமார் 7, 8 வருஷமாகவே பரிசீலனையில் இருந்து வருகிறது என்று கேட்கும் போதெல்லாம் சொல்லப்பட்டு வருகிறது. இந்த முயற்சியின் இறுதி முடிவு எப்போது எடுக்கப்படும்?

THE HON. SRI V. RAMAIAH : நீண்ட காலம் பரிசீலனையில் இருந்து, அடிக்கடி பரிசீலனை செய்யப்பட்டு, அவ்வப்போது சாத்தியமானவைகளை எல்லாம் எடுத்துக்கொள்ள நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. அதைப்போல் தொடர்ந்து செய்து, நமக்கு வசதிப்பட்டதையெல்லாம் கூடிய விரைவில் எடுத்துக் கொள்ளப்படும்.

*Homœopathic System of Medicine*

* 1475 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to bring in legislation to recognise Homœopathic System of medicine?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir.

SRI S. M. ANNAMALAI : ஸார், முன்பு ஒருமுறை கேள்வி கேட்டபோதும், இதைப் பரிசீலனை செய்வதற்காக ஒரு கமிட்டி நியமித்திருக்கிறோம் என்று சொன்னார்கள். இப்போதும்